சங்கற்ப விகற்பமென்பது சிறிதுமின்றி ஒப்பற்ற வொரு பொருளாய் விளங்குந் தேவரீர் இச்செக சீவபரங்களைக் கலந்து கொண்டு அபேதனைக் காணப்படுகின்ற பரம சாமர்த்தியத்தை யாராயுமிடத்துச் சந்திராதியர்கள் தண்ணீரிற் பிரதிபலித்தசை வதுபோன்றும், கண்ணாடியிற்பொருந்திய பலவர்ண பேதங்க ளைப்போன்றும் அவைகளோடு ஒன்றுபட்டதுபோல ஆன்மாக் களது கருவிகரணாதிகளின் வாயிலாக அலைப்புண்டு அவைகட்கு முக்கியவேதுவாயும் நின்ற ஏசக்கரதரா! தேவரீரது திவ்யா கிருதியாகிய அகண்டாகாரத் திருமேனியைக் காண்பானிந்த ஊனக்கண்ணிரண்டும் போராதே! அங்ஙனங்கண்டோமென்று கூறுவது மலடிமைந்தனென்பதுபோலாம். என்றிவ்வாறாகவும் வாழ்த்துகின்றான். 85

என்னை யின்னானென் றறியவொண்ணாது இயல்பாகவே மறைத்துள்ள மாயாந்தகாரத்தை அரிய ஞானபானுவைக்கொண் டோடி உண்மைப்பொரு ளின்னனதென்னத் தோற்றுவித்த உத் தமசற்குருவே! இப்போது தேவரீரித்தன்மையரென்றும், தமி யேனின்னானென்றுஞ் செவ்வனே யறிந்தேனாதலால் இனியெனக் கோர் தற்சுதந்திரமு மின்றெனக்கண்டேன். எல்லாந் தேவரீ ரது ஆக்ஞையேயாம். யானெனதறப் போதித்தருளிய ஞானா சிரியரே! தேவரீரிதுகாறும் கூறியபடியே பற்றில்லாது எனது எதிரிகளாகிய துரியோதனாதியர்களோடும் போர் புரிவான் சித்த மொருமித்துளேன், என்று அவரது ஆணைமேற்கொண்டு தனது ஒப்பற்ற காண்டீபத்தைக் கையிலெடுத்து யுத்தசன்னத்தனாயிருக் கின்றான் என்று சஞ்சயர் கூறினரென்க. 86

இதனைச் செவிமடுத்த துரியோதன மகாராஜன் சஞ்சயரை நோக்கி முக்காலமுணர்ந்த ஏ முனிபுங்கவ! தேவரீர், அன்னோ ரிருவரும் சம்பாஷித்துவந்த சத்திய வர்த்தாந்தங்களனைத்தையு மெவ்வா றுணர்ந்தீர்களென்னலும், சஞ்சயர், ஏ மகாராஜனே! எனது அத்யந்த ஞானாசிரியர் வேதவியாசரன்றோ? அவரே யித்துணையும் சமயநேர்ந்துழி யுபதேசித்தவண்ணம் யான் தங் கட்கோதலாயினேன். ஆனால் இவ்வரியசம்பாஷணையை மற் றியாருமறிந்திலர். என்றுகூறி அத்தியந்தானந்த வசத்தராய்த் துதிகூறுவாராயினர். 87

ஏ திரிதராட்டிர மகாராஜ! மகாஞான சிகாமணியாய்விளங் கிய அருச்சுனனும், ஸ்ரீமந்நாராயணவதாரமாகிய கிருஷ்ணமூர்த்

தியுமாகச் சம்பாஷித்த சரியை கிரியா யோக ஞானனுபூதி விஷயங்களனைத்தையுங் கேட்டமாத்திரத்தே பரமாநந்தசாகரத்தில் மூழ்கியவனாய்த் தேகம்புளகாங்கிதத்தோடு மெய்சிலிர்ப்ப அதியாச்சரியமடைந்து தங்கட்குரைப்பத் தலைப்பட்டேன். 88

அன்றியும், பரமயோகியும், ஸ்ரீமந் நாராயணவதாரமுமாய நந்தகோபாலமூர்த்தியார் அதிப்பரம யிரகசியமாக வுபதேசித்தருளிய இந்தவொப்பற்ற கன்மயோக ஞானகீதையைச் சதுர்வேத சம்பன்னரான வியாசமகாரிஷியின் வாயிலாக யானுங் கேட்டானந்தசாகரத்திற் படிந்தேன். 89

ஏ மகாராஜ! சாலோக சாமீப சாரூப சாயுச்சிய முதலான சர்வபதவிகட்கு மேதுவாய் விளங்கிய அரிய பெரிய கிருஷ்ணார்ச்சுன சம்வாத கீதையின் பிரபாவத்தையும், ஞானார்த்த தத்துவார்த்தங்களின் இரகசியங்களையுங்கேட்ட என்மனமும் அறிவும் அடிக்கடி அதனையே சிந்தித்துச் சிந்தித்துப் பேராநந்தப்பெருங் கடலு ளாழ்கின்றன. 90

இதுமட்டோ! ஸ்ரீபகவான் அருச்சுனனது வேண்டுகோட்கிசைந்து எடுத்தருளிய விசுவரூபக்காக்ஷியின் விசேஷத்தையான் பார்த்ததுமுதல் என்மனம் எண்ணியெண்ணித் தேகபுளகிதமாய்ப் பரவசப்பட்டு என்னறிவு இன்பமயமாகின்றது. என்றுங் கூறுவாராயினர். 91

ஓய் சஞ்சயரே! இதுநிற்க; இப்போது நீர் பார்த்தவரையில் இவ்விருதிறத்தாரும் யுத்தஞ்செய்வார்களாயின் ஜெயம் பெறுவார் யாவரெனக்கேட்ட திரிதராட்டிரனை நோக்கிச் சஞ்சயர், ஏ மகாராஜனே! தர்ம தேவதா சொரூபமாக ஸ்ரீகிருஷ்ண பகவானும், ஒப்பற்ற காண்டீபத்தைக் கைப்பற்றுநின்ற யாதொரு அருச்சுனனும், மற்றுந் தர்மநியாயமென்னு நீதிநெறியும், இராஜலெக்ஷுமிதேவியும் வாசஞ்செய்துள்ள தெந்தப்பக்கத்திலோ அவர்களே பூரணமாய் வெற்றிபெறுவார்களென்பது என்னறிவில் விளங்குகின்றது. ஆகவே தாம் துரியோதனனுள்பட யாவரும் யுத்தஞ்செய்வதை நிறுத்திவிடுதலே யுக்தமெனக்கொண்டு பகவானாய் விளங்கும் தேவகிகுமாரரான ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியைச் சரணடைதலே நலமெனத்தோன்றுகின்றது. என்று சஞ்சயர் கூறிநிறுத்துகின்றார். சுபம்.

இவ்வாறு ஸ்ரீகிருஷ்ணபகவான் திருவாய் மலர்ந்தருளிய கருணாமிர்தமாகிய கீதாவாசகத்தை, பார்தொரு விஜயனிரனை அருச்சுனன் கேட்டதால் சர்வசௌபாக்கியங்களோடுங்கூடிய வெற்றியையும் ஞான மோக்ஷங்களையும் எவ்வாறுபெற்றுப் பெருவாழ்வெய்தினனோ அதுபோலவே ஞானமோக்ஷாஸ்பதமான இக்கீதா நவநீதத்தைக் கற்றோர் கேட்டோர் பிரசங்கித்தோர் முதலிய யாவரும் பெறுதற்கரிய ஞான மோக்ஷங்களையெய்திப் பேரானந்த முறுவரென்பது சத்தியமேயாம். ஜயம்.

சஞ்சய அத்தியாய

முற்றிற்று.

ஆ அத்தியாயம் 18-க்கு-சுலோகப் பொழிப்பு-716.

பகவத்கீதா நவநீத வசன

முற்றிற்று.

---

ஸ்ரீ கிருஷ்ணய பரப்ரம்மணே நம:



